Regd : No. TN - MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE - PAYMENT LICENCE NO G 6 - TN - MS (C) P. P. 55

**லட்சியம்**

நடைமுறைக்கு ஏற்ப செயல்படுவதும் ஒரு லட்சியத்தின்மீது தான் கட்டப்பட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**வழிபாடு**

ஒழுக்கமாய் நடப்பது உயர்ந்த பண்புகள் சொல்வது இதுவே உண்மையான கடவுள் வழிபாடு.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 8 - 10 - 1984 திங்கள் வெளியீடு 9 - 10 - 1984 செவ்வாய் இதழ் 351

## ஆர். வி. எஸ்., - தொண்டமான் மறைவுக்கு

# சட்டசபை இரங்கல்

## டாக்டர் நாவலர் புகழஞ்சலி: சபை ஒத்திவைப்பு

**சென்னை, அக். 8- தமிழக சட்டசபையில் புதுக்கோட்டை தொகுதி உறுப்பினரராக இருந்த விஜய ரகுநாததொண்டமான் மறைவுக்கு இன்று இரங்கல் தெரிவிக்கப்பட்டது. அவை முன்னவர் டாக்டர் நாவலர், சபாநாயகர் ராசாராம் மற்றும் உறுப்பினர்கள் அவருக்கு புகழ் அஞ்சலி செலுத்தினர்.**

இன்று சட்டப் பேரவை கூடியதும் சபையில் முன்னாள் உறுப்பினர்கள் டி.பி.எம். பெரியசாமி, டி.கே. கப்பையா, ராஜா சர் முத்தையா டாக்டர் பி. நடராஜன் எஸ். ராதாகிருஷ்ணன், எஸ். சாமிக்கண்ணு, கே. எஸ். கோதண்டராமையா ஆர். அப்துல்கலீல், டி. குனிராமன்கிடவு, தாத்தாச்சாரி, என்.எஸ். சுந்தரராசன், ஆர்.வி. சாமிநாதன் ஆகியோர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் இரங்கல் குறிப்புகளை சபாநாயகர் படித்தார்.

தொடர்ந்து அவை உறுப்பினர்கள் மறைந்த முன்னாள்சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அஞ்சலி தெரிவிக்கும் வகையில் 2 நிமிடம் எழுந்து நின்று மவுனம் அனுஷ்டித்தனர்.

முன்னாள் சட்டமன்ற பேரவை எதிர்க் கட்சித் தலைவர் வி.கே.ராமசாமி முதலியார் மற்றும் சட்டமன்ற உறுப்பினராக இருந்த விஜயரகுநாத தொண்டமான் ஆகியோர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் இரங்கல் தீர்மானங்களை அவைமுன்னவர் டாக்டர் நாவலர் முன்மொழிந்து பேசினார். அவர் பேசுகையில் கூறியதாவது:-

வி.கே.ராமசாமி முதலியார் தமிழ் நாடு சட்டமன்றப்பேரவைக்கு 1952ம் ஆண்டில் இருந்து 1957ம் ஆண்டு வரையும் மற்றும் 1957-ல் இருந்து 1962-ம் ஆண்டு வரையும் செங்கற்பட்டு மாவட்டம், உத்திரமேரூர் தொகுதியில் இருந்து 2 முறை தேர்ந்தெடுக்கப்பட்டு நல்லமுறையில் பணியாற்றி உள்ளார்.

1957 ம் ஆண்டிலிருந்து 1962ம் ஆண்டு வரையில் அப்பேரவையில் எதிர்க் கட்சித் தலைவராகவும் 1964ம் ஆண்டில் இருந்து 1970ம் ஆண்டுவரை தமிழ் நாடு சட்டமன்ற மேலவை உறுப்பினராகவும் நல்ல முறையில் பணியாற்றி உள்ளார் அவர் இனிய பண்பும், செயல் திறனும் கொண்டவர்.

யாற்றி உள்ளார்.

புதுக்கோட்டை அரச பரம்பரையில் பிறந்த அவர் எளிமையும், இனிய பண்பும், செயல் திறனும் கொண்டவர்.

சிறந்த விளையாட்டு வீரராகவும் முன்னாள் ராணுவ வீரருமாக விளங்கிய அவர் 24-7-1984ம் தேதியன்று மறைந்ததைக் குறித்து இப்பேரவை தனது ஆழ்ந்த துயரத்தை தெரிவித்துக்கொள்கிறது.

தொண்டமானை 30 ஆண்டு காலமாக நான் நன்கு அறிவேன். கட்சி மாச்சரியங்கட்கு அப்பாற்பட்டு சிறந்த முறையில் பழகக்கூடியவர்.

அரச பரம்பரையில் தோன்றினாலும் ஆர்ப்பாட்டம் எதுவும் இன்றி மக்களோடு மக்களாக இணைந்து பணியாற்றியவர். கொடைக்கானல் பகுதியை அழகுபடுத்துவதில் தன்னை பெரிதும் ஈடுபடுத்திக் கொண்டவர். வெளிநாடுகளில் சென்று கல்வி கற்றவர்.

அன்னாரின் மறைவு குறித்து அவரை இழந்துவிட்ட குடும்பத்தினருக்கு ஆழ்ந்த வருத்தத்தையும், அனுதாபத்தையும் இரங்கலையும் இப்பேரவை தெரிவித்துக் கொள்கிறது.

இவ்வாறு டாக்டர் நாவலர் பேசினார்.

இரங்கல்தீர்மானத்தின் மீதுஎன.எஸ். வி.சித்தன் [இ. காங்], அன்பில்தர்மலிங்கம் [தி. மு. க.], சங்கரய்யா [மார்க்சிஸ்ட்] அழகிரிசாமி [இ. கம்யூ], எஸ். டி. சோமசுந்தரம், நவநீத கிருஷ்ணபாண்டியன் (கா. கா. தே. கா), ஆண்டித்தேவர் [அ. இ. பா பி] இஸ்மாயில்ஜனதா, நெடுமாறன் காமராஜ் காங்கிரஸ் சட்டநாதகரையாளர் (இ.சோ.க) மூர்த்தி (குடியரசு) ஆகியோர் பேசினர்.

உறுப்பினர்கள் பேசி முடிந்தபின் இரங்கல் தீர்மானத்தின் மீது சபாநாயகர்ராசாராம் தன் கருத்தையும் இணைத்துக்கொண்டார். பிறகு உறுப்பினர்கள் மறைவுக்கு சபையில் இரண்டு நிமிடம் மவுனம் அனுஷ்டிக்கப்பட்டது. தொடர்ந்து தற்போதைய சட்டமன்ற உறுப்பினராக இருந்த விஜயரகுநாத தொண்டமான் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் வகையில் சபையின்

6-ம் பக்தி பார்க்க

### ஆழ்ந்த அனுதாபம்

அன்னார் 7-8-84ம் தேதியன்று மறைந்ததைக் குறித்து இப்பேரவை தனது ஆழ்ந்த துயரத்தை தெரிவித்துக் கொள்கிறது.

அன்னார் தனது 83வது வயதில் மாரடைப்பு காரணமாக காலமானார்

நீண்டகாலமாக அரசியல் ஈடுபாடு கொண்டவர் ஜமீன் குடும்பத்தில் தோன்றினாலும் சமூகத் தொண்டாற்றுவதில் தனது உழைப்பு, நேரத்தை பயன்படுத்தியவர்.

கூட்டுறவு இயக்கத்தில் மிகுந்த ஈடுபாடுகொண்டு இருந்தவர். அன்னாரின் மறைவு குறித்து அவரை இழந்துவிட்ட குடும்பத்தினருக்குஆழ்ந்த வருத்தத்தையும் அனுதாபத்தையும் இரங்கலையும் இப்பேரவை தெரிவித்துக் கொள்கிறது.

### தொண்டமான்

விஜயரகுநாத தொண்டமான் தமிழ்நாடு சட்டமன்ற பேரவைக்கு 1967ம்ஆண்டில் இருந்து 1971ம்ஆண்டு வரையும் மீண்டும் 1977ம் ஆண்டில் இருந்து 1980ம் ஆண்டு வரையும் மற்றும் 1980 ஆண்டு முதல் தற்போதைய சட்டமன்றப் பேரவைக்கும் புதுக்கோட்டை மாவட்டம் புதுக்கோட்டை தொகுதியில் இருந்து 3 முறை தேர்ந்து எடுக்கப்பட்டு நல்ல முறையில் பணி

(8ம் பத்தி தொடர்ச்சி)

இன்றைய நிகழ்ச்சிகளு இத்துடன் ஒத்திவைக்கப் படுவதாக சபாநாயகர் அறிவித்தார்.

பேரவை கூட்டம் நாளை காலை மீண்டும் தொடர்கிறது.

---

**ப. உ. ச. கடிதம்**

# நாம் போராடுவது நாடு செழிக்க!

பேரன்புடையீர்,

தி.மு.க. ஏடு மீது வழக்குத் தொடருகிறார் மாண்புமிகு அமைச்சர் பொன்னையன்!

இது ஏற்றுக் கொள்ளக்கூடியதல்ல! அவதூறும் அக்கப்போரும் எழுத தி.மு.க. ஏடுகளுக்கு உரிமை கிடையாதா? பொய்யும் புனைசுருட்டும் இல்லையேல் எப்படி அரசியல் வாழ்வு நடத்துவது? ஜனநாயகத்தில் வதந்திகளைப் பரப்புவதும் பச்சைப் பொய்யை மெச்சத்தக்க வகையில் எழுதுவதும் கற்பனை குற்றச் சாட்டுக்களை அரசியல் அங்காடியில் விற்பனை செய்வதும் பழி பாவத்திற்கு அஞ்சாது குழிபறிப்பதும் தி.மு.க. தலைவருக்கு இருக்கும் அடிப்படை உரிமை அல்லவா? அதைப்பறிக்க சட்ட அமைச்சர் முயற்சிக்கலாமா?

என்ன அநியாயம்? அய்யகோ!—வதந்திகளை பரப்பக்கூட உரிமை இல்லையா? இதற்கா சுதந்திரம் பெற்றோம்?

எழுத்துரிமையைப் பறிப்பதா? எழுத்துரிமை அரசியல் சட்டத்தில் வழங்கப்பட்டுள்ளதே! எழுத்துரிமை என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய பொய்யை எழுதக் கூடாதென்றில்லையே! கண்ணகியின் கற்பைப்பற்றி பெருமைபட எழுதுவதா மாதவியின் வேலை? மான்குட்டியின் கண் அழகை ரசிக்கவா நரி அதைத் தேடுகிறது?

இப்படியெல்லாம் தி.மு.க. தலைவர் அங்கலாய்பார்—ஆலாய் பறப்பார்!

அவர் எதை வேண்டுமென்றாலும் பேசுவார், எழுதுவார்! அதைஎதிர்த்து வழக்குத்தொடர்ந்தால் துடிப்பார்— நீதி மன்றத்துக்கு வரமாட்டேன் என்பார்! "கைது செய்துபார்" என்பார். காவல் துறையினர் வந்தால் வாயிற்படியில் தொண்டர்களைப்படுத்து புரளச் சொல்வார்! அவருடைய ஆசையெல்லாம் 'கைது செய்ய மாட்டார்களா? அதை வைத்து அரசியல் ஆதாயம் கிடைக்காதா?' என்று எதிர்பார்க்கிறார்!

தி. மு. க. தலைவர் கூறும் குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரம் இல்லையென்று அவருடன் கூடியுள்ள கட்சியினருக்குத் தெரியும். தெரிந்தும் துதி பாடுகின்றனர்! ஆனால் தி. மு. க. தலைவர் 'நாணயமானவர்' என்றோ 'நல்லவர்' என்றோ, 'நேர்மையானவர்' என்றோ, 'இலஞ்சம் வாங்காதவர்' என்றோ இதுவரை கூற வில்லை! கூறவும்மாட்டார்கள்.

தி.மு.க. கூட்டணியில் உள்ளவர்கள் திராவிட இயக்கத்தினரே 'நாணயங்கெட்டவர்கள்' என்று முத்திரை குத்த காத்துள்ளனர்!

"கோபாலபுரத்தை அழித்து விட்டோம். ராமாவரத்தையும் அழித்துவிட்டால் போதும்" என்று நினைக்கின்றனர்!

பொது எதிரிகளின் நோக்கம் தெரிகிறது. புரிகிறது! ஆனால் அரசியல் வாழ்வு இழந்து விட்ட தி.மு.க. வினர் விரக்தியின் எல்லைக்குப் போய் யார் வந்தாலும் பரவாயில்லை நாம் வரக் கூடாதென்று நினைக்கின்றனர்.

பகைவர்கள் சூழ்ந்து நிற்கின்றனர் நம்மை நாமே தான் காத்துக் கொள்ள வேண்டும்!

பதவி சுகத்திற்காக அல்ல! இந்த நாட்டை கொள்ளைரிடம் ஒப்படைக்க மனம் இடந்தராததால்தான் போராடுகிறோம்!

அவர்கள் போராடுவது நம்மை அழிக்க!

நாம் போராடுவது நாடு செழிக்க!

அன்புள்ள

ப. உ. ச.

---

இங்கல்ல - கோலாலம்பூரில்...

## சிகரெட் மூலம் மாணவர்களுக்கு கொடூர தண்டனை

கோலாலம்பூர், அக் 8- சிகரெட் புகையை வெளியேவிடாமல்விழுங்க வேண்டும் என்ற கொடூர தண்டனை பள்ளி மாணவர்களுக்குஅளிக்கப் பட்டுள்ளது.

இது பற்றிய விவரம் வருமாறு:-

மலேசிய நாட்டில் கோலாலம்பூரில் இருந்து 200 கிலோ மீட்டர் தொலைவில் மரான் நகரியம் உள்ளது.

இந்நகரியத்தில் உள்ள பள்ளிக் கூடம் ஒன்றில் தவறு செய்த மாணவர்களுக்குகொடூர தண்டனை அளிக்கப்பட்டது.

இந்த மாணவர்கள் அனைவரும் 12வயதுக்குட்பட்டவர்கள 1-வது வகுப்பு முதல் 6-வது வகுப்புவரை படிக்கும் மாணவர்கள்.

தண்டனைஎன்ற பேரில் இந்த மாணவர்களிடம் சிகரெட் தந்து புகைக்கும்படி வற்புறுத்தப்பட்டார்கள அப்படி புகைக்கும் போது புகையை வெளியே விடக் கூடாது விழுங்கி விட வேண்டும் என்று மிரட்டப்பட்டார்கள்.

அவ்வாறு செய்த மாணவர்கள் வாந்தி எடுத்து மயங்கி விழுந்தார்கள் என்று அந்த பள்ளிக்கூட ஆசிரியர் - பெற்றோர் - சங்கத் தலைவர் ஹாஜிமிஹாத் கூறியுள்ளார்.

இப்படிப்பட்ட கொடூர தண்டனைகளைவிதிக்கும் ஆசிரியர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கும்படி கல்வி அமைச்சகத்திடம் வற்புறுத்தப் பட்டுள்ளது.

இவ்வாறு மாணவர்களுக்கு கொடூர தண்டனை விதிப்பது இது முதல் அலல.

ஏற்கனவே கடந்த மாதத்தல் கௌாங் எனனும் இடத்தில் படிக்கும் 6 மாணவர்கள் உடைகளையப்பட்டு. காகிதத்தை தின்னும்படி தண்டனை அளிக்கப்பட்டது.

---

5 நாள் ஓய்வில் இருக்க டாக்டர்கள் ஆலோசனை

# புரட்சித்தலைவர் உடல் நிலையில் நல்லமுன்னேற்றம்

## பிரதமர் இந்திராகாந்தி தொலைபேசி மூலம் விசாரித்தார்

**சென்னை, அக். 8- நெஞ்சுச்சளி காரணமாக தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் முதல்வர் புரட்சித்தலைவரின் உடல்நிலையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.**

முதல்வர் புரட்சித் தலைவரின் உடல் நிலை குறித்து பிரதமா இந்திரா காந்தி தொலைபேசி மூலம் கேட்டறிந்தார்.

முதல்வர் புரட்சித் தலைவர் நெஞ்சுச் சளிக் காரணமாக தனியார் மருத்துவமனையில் தங்கி சிகிச்சை பெற்று வருகிறார்.

முதல்வர் புரட்சித் தலைவரின் உடல் நிலையில் நல்ல முன்னேற்றம் அடைந்துள்ளதாக முதல்வர் புரட்சித் தலைவருக்கு சிகிச்சை செய்யும் டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

முதல்வர் புரட்சித் தலைவரின் உடல் நிலை முன்னேற்றம் தங்களுக்கு திருப்தியளிக்கும்வகையில் உள்ளதாகவும் டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு 5 நாட்கள் பூரண ஒய்வு

### பிரதமர் இந்திரா கேட்டு அறிந்தார்

முதல்வர்புரட்சிதலைவர் தலைவரின் உடல் நிலை குறித்து பிரதமர் இந்திரா காந்தி தொலைபேசி மூலம் கேட்டறிந்தார்.

தேவை என்றும் பார்வையாளர்கள் எவரும் வர வேண்டாம் என்று டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

நேற்றிரவு முதல்வர்

(2-ம் பக்கம் பார்க்க)

---

சட்டசபை பார்வையாளர் பகுதியில்

## வெடிகுண்டு - கத்தி வைத்திருப்போரை காட்டிக்கொடுக்கும் கருவிகள்!

சென்னை, அக். 8- சட்டசபையில் பார்வையாளர் பகுதியில் யாரேனும் கத்தி-வெடி குண்டு மற்றும் உலோகத்தாலான எந்தப் பொருளையும் எடுத்துச் செல்லுவோரை காட்டிக்கொடுக்கும் "மெட்டல் டிடெக்டர்" என்ற கருவிகள் இரண்டு பொருத்தப்பட்டுள்ளன.

பார்வையாளர்கள் யாரேனும் கத்தி - வெடி குண்டு எடுத்து வந்தால பார்வையாளர் பகுதிக்குள் நுழையும் போதே இக்கருவிகள் மணியடித்து காட்டிக் கொடுத்துவிடும்.

இக்கருவிகள் 40 ஆயிரம் ரூபாய் செலவில் அமைக்கப் பட்டுள்ளன.

# சென்னையில் கழகத் தோழர் படுகொலை

**சென்னை, அக். 8 சென்னையில் கழகத் தோழர் ஒருவர் கண்டதுண்டமாக வெட்டிப் படுகொலை செய்யப்பட்டார்.**

சென்னை விருகம்பாக்கத்தைச் சேர்ந்த கழகத்தோழர் ஜார்ஜ் வயது 28 இவருக்கும் அப்பகுதியில் உள்ள சில சமூக விரோதிகளுக்கும் முன்விரோதம் இருந்து வந்ததாம்.

இதனால் அவர் அங்கிருந்து வீட்டை காலி செய்து விட்டு வேறு இடத்திற்கு குடி சென்று விட்டாராம்.

நேற்று இரவு தன்னுடைய அக்காவைப் பார்ப்பதற்காக அவர் கே. கே. நகருக்கு வந்திருந்தாராம்.

அப்போது அவருடைய எதிரிகள் இவரை மடக்கி அரிவாளால் கண்டதுண்டமாக வெட்டிக் கொன்று விட்டனர்.

ஜார்ஜ் அந்த இடத்திலேயே ரத்தவெள்ளத்தில் பிணமானார்.

தகவல் கிடைத்ததும் செங்கல்பட்டு கிழக்குபகுதி போலீஸ் சூப்பிரண்ட் ரமணன், விருகம்பாக்கம் இன்ஸ்பெக்டர் மனோகரன் மற்றும் போலீசார் இடத்திற்கு விரைந்து சென்று பிணத்தை கைப்பற்றி பிரேத பரிசோதனைக்கு அனுப்பி வைத்தனர்.

இது குறித்து போலீசார் வழக்கு ஒன்று பதிவு செய்து குற்றவாளிகளை தேடி வருகின்றனர்.

தொண்டை வலி

சிகிச்சைக்காக

# முதல்வர் ஹெக்டே அமெரிக்கா செல்கிறார்

பெங்களூர், அக். 8- கர்நாடக முதல்வர் ஹெக்டே தொண்டை வலிக்கு சிகிச்சை பெற வரும் 17-ந் தேதி அமெரிக்கா போகிறார். தொண்டையில் அவருக்கு சதை வளர்ச்சி ஏற்பட்டு உள்ளதால் "ரேடியம் ஒளிக்கதிர்" செலுத்தி கரைப்பதற்காக அவர் அமெரிக்கா செல்லுகிறார் அமெரிக்காவில் பாஸ்டன் நகரில் உள்ள ஆஸ்பத்திரியில் அவருக்கு வரும் 17-ந் தேதி சிகிச்சை நடைபெறுகிறது. அவருடன் அவரது மனைவியும் உடன் செல்கிறார். அமெரிக்காவில் அவர் 15 நாட்கள் தங்கியிருப்பார்.

மேட்டூர் அணையில்

# தண்ணீர் அளவு நூறு அடியைத் தாண்டியது

**சேலம், அக். 8- காவிரி நீர்ப்பிடிப்புப்பகுதிகளில் மழை பெய்ததன் காரணமாக மேட்டூர் அணையில் நீர் மட்டம் 100 அடியைத் தாண்டியது.**

கடந்த சில தினங்களாக காவிரிநீர்ப்பிடிப்பு பகுதிகளில் நல்லமழை பெய்து வருகிறது. இதனால் காவிரியில் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகிறது.

மேட்டூர் அணை நீர்த்தேக்கத்தில் இந்த தண்ணீர் வந்து விழுவதால் 'இடுகிடு' என்று மேட்டூர் அணை நீர்மட்டம் உயர்ந்து வருகிறது. நேற்று காலை 8 மணிக்கு நீர்மட்டம் 100.6 அடியாக இருந்தது.

மேட்டூர் அணையின் நீர்மட்ட உயரம் 124 அடியாகும். அதில் அதிகபட்சமாக 120 அடி வரை நீரை சேமித்து வைக்க முடியும்.

தற்போது அணையில் வினாடிக்கு 27 ஆயிரத்து 807 கன அடி வீதம் தண்ணீர் வந்துவிழுந்து கொண்டிருக்கிறது. வினாடிக்கு 700 கன அடி வீதம் தண்ணீர் விடுவிக்கப்படுகிறது.

# பெல்காமில் வன்முறை கலவரம்: 220பேர் கைது

பெல்காம், அக். 8— முகரம் பண்டிகையன்று (6ந் தேதி) பெல்காமில் இரு கோஷ்டிகளுக்கு இடையே மோதல் ஏற்பட்டது. இந்த மோதல் வன்முறை கலவரமாக மாறியது.

வீடுகள் தியிட்டுக் கொளுத்தப்பட்டன. கத்திக் குத்துச் சம்பவங்களும் இடம் பெற்றன.

இதை யடுத்து கடந்த இரு தினங்களாக இரவு நேரத்தில் மட்டும் இப்பகுதியில் ஊரடங்கு உத்தரவு அமலாக்கப்பட்டு வருகிறது.

வன்முறைக்கலவரத்தை யொட்டி 220 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். நகரில் இன்னும் 4 நாட்களுக்கு தடை உத்தரவை நீட்டிப்பது எனவும் அரசு முடிவுசெய்துள்ளது.

# சுத்திகரிப்பு ஆலையில் ரூ. 2.3 கோடியில் கம்ப்யூட்டர் வசதி

**சென்னை, அக் 8. சென்னை அருகே உள்ள எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையில் ரூ. 2.3 கோடியில் நவீன கம்ப்யூட்டர் வசதியுடன் கூடிய கண்ட்ரோல் சாதனம் அமைக்கப்பட்டுள்ளது**

சென்னைக்கு அருகே மணலியில் சென்னை எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையின் புதிய விஸ்தரிப்பு ஆலைக்கான நவீன கம்ப்யூட்டர் வசதியுடன் கூடிய கண்ட்ரோல் சாதனங்கள் அமைப்பு இன்று இயக்கி வைக்கப்பட்டது. சுமார் 2 கோடியே 30 லட்சம் ரூபாய் செலவில் அமைக்கப்பட்டுள்ளது.

இந்த கண்ட்ரோல் சிஸ்டத்தை மத்திய அரசு பெட்ரோலியம் இலாகா செயலாளர் ஏ. எஸ். கில் ஆரம்பித்து வைத்தார்.

அவரை ஆலையின் சேர்மன் மற்றும் நிர்வாக இயக்குனர் வி. ஆர். தீனதயாளு வரவேற்று ஆலையின் பல்வேறு பகுதிகளை சுற்றிகாண்பித்தார்.

மிகவும் திறமையோடு நடத்தப்படும் ஆலைகளில் ஒன்றாக இந்த ஆலை விளங்குகிறது என்று ஏ. எஸ். கில் பாராட்டினார். இந்த ஆலையில் தொழிலாளர்களின் தலைமைகொண்ட ஒரே தொழிற்சங்கம் சிறப்பான சேவை செய்து வருவது பற்றி தொழிற்சங்கத் தலைவர் எஸ். அன்சர் ஷாவிடம் கில் தனது பாராட்டுதல்களை தெரிவித்தார்.

# முதல்வர் உடல்நிலை

[முதற் பக்கத் தொடர்ச்சி]

புரட்சித்தலைவர் நன்கு தூங்கினார் என்றும் டாக்டர்கள் கூறினர்.

## கவர்னர் குரானா

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் குணமடைய விருப்பம்தெரிவித்து கவர்னர் குரானா மலர் செண்டு ஒன்றை அனுப்பியுள்ளார்.

தி. மு. க. தலைவர் கருணாநிதி, மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் நல்லசிவன், உமாநாத் எம். எல். ஏ., ஆகியோரும் முதல்வர் விரைவில் குணமடைய வேண்டும் என தந்தி அனுப்பியுள்ளனர்.

பரங்கிமலையில் உள்ள மலை சர்ச்சில் ஆர்ச்பிஷப் அருளப்பா முதல்வர் விரைவில் குணமடைய பிரார்த்தனைக் கூட்டம் நடத்தினார்.

வடபழனி கோவிலில் நாளை (9-ந்தேதி) காலை 8-மணிக்கு பொது வழிபாடு நடைபெறும் என்று தி. நகர் மூர்த்தி தெரிவித்துள்ளார். இதில் தொகுதி கழக மன்ற நிர்வாகிகள் பங்கேற்பார்கள் என்றும் தி நகர் மூர்த்தி தெரிவித்துள்ளார்.

# இந்தியாவை துண்டாட பிந்தரன்வாலேயுடன் பாகிஸ்தான் நடத்தியசதி

## திடுக்கிடும் தகவல் அம்பலம்

**புதுடெல்லி, அக். 8. இந்தியாவைத் துண்டாட பிந்தரன்வாலே பாகிஸ்தானுடன் சேர்ந்து சதி செய்ததாக திடுக்கிடும் தகவல் அம்பலமாகியுள்ளது.**

பத்திரிகையாளர் சந்த்ஜோஷி என்பவர் எழுதியுள்ள புத்தகம் ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

அமிர்தசரஸ் பொற்கோவிலில் இந்திய ராணுவம் எடுத்த நடவடிக்கையின் போது தீவிரவாதிகளின் தலைவரான பிந்தரன்வாலே மரணமடைந்தார்.

அமிர்தசரஸ் பொற்கோவிலில் எடுக்கப்பட்ட ராணுவ நடவடிக்கைகளுக்கான ஏற்பாடுகள் கடந்த ஏப்ரல் மாதமே தொடங்கி விட்டன.

இந்தியாவைத் துண்டாட சாவதேச அளவில் தீவிர சதித்திட்டம் ஒன்று உருவாகியுள்ள தற்கான அறிகுறிகள் தென்பட்ட பிறகு இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

## முக்கிய தகவல்

சீக்கிய தீவிரவாதிகளின் தலைவரான பிந்தரன் வாலே தனது கூட்டாளி அம்ரீக்சிங்குடன் 1982 ஜூன் மாதம் முதல்வாரத்தில் பாகிஸ்தான் சென்று வந்ததாக தெரியவந்துள்ளது.

அகில இந்திய சீக்கிய மாணவர்சம்மேளனத்தில் தனது உளவாளி மற்றும் ரஷ்ய உளவு அமைப்பு திரட்டியதகவல்கள்மூலம் இந்தசதித்திட்டம்குறித்த தகவல்களை இந்தியஉளவு அமைப்பான 'ரா' திரட்டியுள்ளது.

இந்தியாவில் பல்வேறு பகுதிகளில 1984 ஜூன்-ஜூலை மாதங்களில் கலகம் புரிய மக்களைத் தூண்டிவிட்டு அந்தநேரத்தில் பாகிஸ்தான படை எடுக்கவும் திட்டமிட்டிருந்ததற்கான பல முக்கிய தகவல்கள் கிடைத்தன.

## பாகிஸ்தான் ஒப்புதல்

கலகத் திட்டத்திற்கு பாகிஸ்தான் ஜெனரல இக்பால் ஒப்புக்கொண்டதாகவும், அதற்கு முன் சீக்கிய தீவ்ரவாதிகளின் தலைவர்கள் மேஜர் ஜெனரல் ஷபக்சிங் அம்ரீக்சிங் ஆகியோரை சந்தித்துப் பேச விரும்புவதாக கூறியதாகவும் தெரியவந்துள்ளது.

பாகிஸ்தான் ராணுவ அதிகாரி ஒருவர், இந்தியாவில் உளவறிய வந்தது தெரியவந்தது.

அவரிடம் பிரதமரின் பாதுகாப்பு ஆலோசகரே நேரடியாக விசாரணை நடத்தினார்.

பிந்தரன்வாலேயின் கலகத்திட்டத்திற்கு உதவிபுரிய பயிற்சி பெற்ற ஆயிரம் பேரை பாகிஸ்தான் அனுப்பியதும் தெரியவந்தது.

இவ்வாறு ஜோஷியின் புத்தகத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

தர்மபுரி தொகுதியில்

# கழகக் கொடியேற்று விழா

தர்மபுரி, அக். 8— தர்மபுரி தொகுதியில் 19 நிகழ்ச்சிகளில் 30 இடங்களில் கழக கொடியேற்று விழாநிகழ்ச்சிகள் நடந்தன நிகழ்ச்சிகளில் கழக எம். எல். ஏ. எஸ், அரங்கநாதன், த. மாரிமுத்து, டி. எஸ். ஜப்பார், மணிவேந்தன். நாகலிங்கம், விசயன், ஜி. அரங்கநாதன், மோகன், அனந்தன் ஆகியோரும் மற்றும் பலரும் பங்கேற்றனர்.

விஜயா கலைக்குழுவினரின் கலைநிகழ்ச்சியும் நடைபெற்றது.

# தஞ்சை நகரக் கழக ஆலோசனைக் கூட்டம்

தஞ்சை, அக். 8— தஞ்சை நகரக்கழகஆலோசனைக் கூட்டம் அவைத் தலைவர் ஆர் ராஜப்பா தலைமையில் நடந்தது

கூட்டத்தில் வட்டக் கழகச் செயலாளர்கள்-நிர்வாகிகள் மன்ற நிர்வாகிகள், தொழிற்சங்க நிர்வாகிகள், இளைஞர்-மாணவர், மகளிர் பிரிவினர், கழக வழக்கறிஞர்கள் உட்பட 230 பேர் பங்கேற்றனர்.

கூட்டத்தில், பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# அம்பத்தூரில் புதிய பாலிடெக்னிக் துவக்க திட்டம்

## அமைச்சர் சவுந்தரராஜன் தகவல்

**சென்னை. அக். 8- அண்ணா பவளவிழா ஆண்டில் அம்பத்தூரில் புதிதாக பாலிடெக்னிக் ஒன்று துவக்கப்படும் என்று அமைச்சர் சவுந்தரராஜன் கூறினார்.**

அண்ணா பவள விழாவும், பட்டாபிராம் சத்திரம் பள்ளியின் புதிய கட்டிட அடிக்கல் நாட்டு விழாவும் நடைபெற்றது.

விழாவுக்கு மாவட்ட ஆட்சித்தலைவர் டி. ஆர். சினிவாசன் தலைமை வகித்தார்.

விழாவில் அமைச்சர் சவுந்தரராஜன் கூறியதாவது:

இந்த விழாவில் பேசிய ஜே. சி. டி. பிரபாகரன் அம்பத்தூர் நகரியத்தின் சார்பில் பாலிடெக்னிக் ஒன்றை நிறுவ வேண்டும் என்றார்.

அம்பத்தூர் நகரியம் நடத்துகின்ற வகையில் புதிய பாலிடெக்னிக் ஒன்றை அண்ணா பவள விழா ஆண்டிலேயே அமைக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

இதற்கு முதல்வர் புரட்சித்தலைவரும் ஒப்புக்கொள்வார்.

மக்களைசந்தித்துக்குறைகளை கேட்க மாவட்ட ஆட்சித்தலைவர் ஒரு நாளை ஒதுக்குகிறார்.

அதே போல நகராட்சி அதிகாரிகள் மக்களை சந்திக்க ஒரு நாளை ஒதுக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராஜன் கூறினார்.

# பம்பாய் கிரிக்கெட்

பம்பாய், அக் 8— பம்பாயில்இன்று நடந்த ஒரு நாள் கிரிக்கெட் போட்டியில் பம்பாய் அணி 47 ஓவர்களில் 190 ரன்கள் எடுத்தது.

ஆஸ்திரேலிய அணி ஆடுகிறது 47 ஓவர்களில் இந்த அளவு ரன்களை அவர்கள் எடுக்கவேண்டும்.

தமிழ்நாடு

# சவர தொழிலாளர் மாநில மாநாடு

சென்னை, அக். 8. தமிழ்நாடு சவரத் தொழிலாளர் சங்க 2-வது மாநில மாநாடுநாளையும் நாளைமறுதினமும் சென்னை தர்ம பிரகாஷ் திருமண மண்டபத்தில் நடைபெறுகிறது.

மாநாட்டில் அமைச்சர்கள் பண்ருட்டியார், ஆர். சவுந்திரராசன், எஸ். ஆர் ராதா, எம். ஆர். கோவேந்தன், சிவாஜி கணேசன் எம். பி. ஆகியோர் கலந்து கொள்ளுகிறார்கள்.

சபாநாயகர் கே. ராஜாராமும் மாநாட்டில் பங்கேற்கிறார்.

போக்குவரத்து

கழக ஊழியர்கள்

# முதல்வருக்கு நன்றி

சேலம், அக். 8- போக்குவரத்துக்கழகங்களில் பணியாற்றும் ஊழியர்களின் குடும்பத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு என பொறியியல் கல்லூரி அமைக்கப்பட்டுள்ளதற்கு போக்குவரத்துக் கழக ஊழியர்கள் முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றிதெரிவித்துக்கொண்டுள்ளனர்.

சேலம் மாவட்ட அண்ணா தொழிலாளர் சங்க செயலாளர் பழனியப்பன் நன்றி தெரிவித்து அறிக்கை வெளியிட்டுள்ளார்

பஸ் விபத்து:

# 70 பேர் காயம்

காசியாப்பூர், அக். 8— காசி அருகே பயணிகளை ஏற்றிச் சென்ற பஸ் ஒன்று மரத்தில் மோதியதல் 70 பேர் காயமடைந்தனர் இதில் 3 பேரின் உடல் நிலை மோசமாக உள்ளது.

போலீசார் இந்த விபத்து குறித்து விசாரித்து வருகிறார்கள்.

நிலச் சரிவு

# வீடு இடிந்து தந்தையும் மகனும் சாவு

கோழிக்கோடு, அக். 8- திடீரென்று ஏற்பட்ட நிலச்சரிவால் வீடுஇடிந்து விழுந்தது. அதில் வீட்டிற்குள் இருந்த தந்தையும் மகனும் கொல்லப்பட்டனர் மற்றும் 3பேர்காயம் அடைந்தனர்

இந்த விபத்து கோழிக்கோடு மாவட்டத்தில தலயாடு எனனும் இடத்தில் ஏற்பட்டது.

# நாட்டு ஒற்றுமையை குலைக்க முற்படும் பிரிவினை சக்திகள்

## பிரதமர் இந்திரா எச்சரிக்கை

**சந்திராபூர், அக் 8 மதம்மற்றும் வட்டார கோரிக்கைகள் என்ற போர்வையில் பிரிவினை சக்திகள் நாட்டின் ஒற்றுமையை குலைப்பதில் ஈடுபட்டுள்ளன என்று பிரதமர் இந்திராகாந்தி எச்சரித்தார்.**



மராட்டிய மாநிலத்தில் சந்திராபூர் என்னும் இடத்தில் பிரமாண்டமான அளவில் உருவாகிவரும் அனல்மின்நிலையத்தின் முதல் கட்ட பணி பூர்த்தியடைந்தன.

இதனை துவக்கிவைத்து பிரதமர் இந்திராகாந்தி பேசியதாவது:-

அத்யாவசியப் பொருட்களின் விலைகள் உயர்ந்துள்ள போதிலும் பண வீக்கத்தை கட்டுப் படுத்துவதில் அரசுவெற்றி கண்டுள்ளது,

ஜனதா ஆட்சி காலத்தில விலைவாசி 21 சதவீதம் உயர்ந்தது. ஆனால் அது இப்போது 6. 7 சதவீதமாக குறைக்கப்பட்டு விட்டது.

விலைவாசி உயர்வும் பண வீக்கமும் இந்தியாவில் மட்டுமல்ல உலகம் முழுவதிலும் காணப்படுகிறது.

கீழ் நிலையில் இருந்து அல்லல்படும் மக்களின் உன்னத வாழ்வை குறிக்கோளாகக் கொண்டு 20 அம்சதிட்டம் துவங்கப்பட்டது.

## 20 அம்ச திட்டம்

துரதிர்ஷ்டவசமாக இந்த திட்டத்தின் மூலம் கிடைக்கும் பலன்களை மக்கள் அறிந்து கொள்ளாமல் இருக்கிறார்கள்.

20 அம்சத் திட்டம் பற்றியும் அதன் மூலம் கிடைக்கும் முன்னேற்றத்தையும் மக்கள் அறிந்து கொள்ள வேண்டும்.

நாட்டின் வளம் மற்றும் வளர்ச்சி ஆகியவற்றை கருத்தில் கொண்டுமாநில அரசுகள் மேற்கொள்ளும் முயற்சிகளை ஒருங்கிணைப்பதே மத்திய அரசின் கடமையாகும்.

ஆனால் சில அரசியல் வாதிகள் மத்திய - மாநில அரசுகளுக்கு இடையேயான நல்லுறவில் குழப்பத்தை ஏற்படுத்தி வருகிறார்கள்.

மதம் மற்றும் வட்டார கோரிக்கைகள் என்ற போர்வையில் பிரிவினைச் சக்திகள் நாட்டின் ஒற்றுமையை குலைப்பதில் ஈடுபட்டுள்ளன.

## அரசியல் விடுதலை

பல்லாயிரக்கணக்கான பேர் தியாகம் செய்து வாங்கித்தந்த சுதந்திரத்தைக் கட்டிக் காப்பதற்கு நாட்டின் ஒற்றுமையும் ஒருமைப்பாடும் அவசியம் ஆகும்.

அரசியல் விடுதலையை அர்த்தமுள்ளதாக்க பொருளாதார விடுதலை அவசியமானதாகும்.

எனவே நாட்டின் இன்றையதேவை என்னவென்றால் உற்பத்தியை அதிகரிப்பதன் மூலம் நாட்டை சுயகாலூன்றிதாக மாற்ற மக்கள் ஒன்றுபட்ட முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்பது தான்.

இவ்வாறு பிரதமர் இந்திராகாந்தி கூறினார்.

# டாக்டர் ஒருவரது உயிரைக் குடித்த பூஜை பூசணிக்காய்

**சென்னை, அக். 8- பூஜைக்குப் பிறகு ரோடில் உடைக்கப்பட்ட பூசணிக்காயால் டாக்டர் ஒருவரது உயிர் பறிபோனது**

இந்தபரிதாப சம்பவம் சென்னையில் நடந்தது.

ஆயுத பூஜையன்று திருஷ்டி சுற்றி பூசணிக்காயை ரோடில் உடைக்கிறார்கள்.

இதில் வண்டிகள் வழுக்கி விடுவதால் விபத்து ஏற்படுகிறது.

சேத்துப்பட்டைசேர்ந்த டாக்டர் பி. ராமலிங்கம். இவர்ஒருஎன்.டி.டாக்டர் திருவொற்றியூரில் கிளினிக் வைத்திருந்தார்.

கடந்த 4ந் தேதி யன்று கிளினிக் செல்ல ஸ்கூட்டரில் சென்றார்.

இரவு 11-30 மணியளவில் தண்டையார் பேட்டை ரோடில் வந்து கொண்டு இருந்தார்.

சாலை எங்கும் பூசணிக்காய்கள் சிதறிக்கிடந்தன.

அதில் ஒரு பூசணிக்காய் வழுக்கி ஸ்கூட்டர் உருண்டு ராமலிங்கமும் ரோட்டில் உருண்டார்.

இதனால் அவருக்கு பலத்த காயம்ஏற்பட்டது.

சிகிச்சைக்காக அரசு பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார், ஆனால் சிகிச்சை பயன் அளிக்காமல் போகவே நேற்று அவர் மரணம் அடைந்தார்.

40 வயதான அவருக்கு மனைவியும் ஒரு மகனும் ஒரு மகளும் உள்ளனர்.

கருணாநிதி எடுபிடி ஏட்டின் பொய்ச் செய்தி'

# துளசாபுரம் கிளைக் கழக செயலாளர் மறுப்பு

தலைஞாயிறு, அக். 8— துளசாபுரம் கிளைக் கழகசெயலாளர் சி.சுப்பிரமணியம் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

கழகத்தில் இருந்து நானும் மற்றும் 75 பேரும் விலகி விட்டதாக கருணாநிதி கட்சியின் எடுபிடி ஏடான தினகரனில் பொய்ச் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

வேண்டுமென்றே இவ்வாறு பொய்ச் செய்து வெளியிடுவது கண்டிக்கத் தக்கது.

இவ்வாறு பொய்செய்தி வெளியிடுவது தொடருமானால் சம்பந்தப்பட்டவர்கள மீது சட்டப்படி கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

கிராமப் புறங்களில்

# கல்வி வளர்ச்சிக்கு பேருதவி புரியும் சத்துணவு திட்டம்

## அமைச்சர் கோவேந்தன் பேச்சு

பேராவூரணி, அக். 8- கிராமப் புறங்களில் கல்விவளர்ச்சிக்குசத்துணவுத் திட்டம் பேருதவி புரிவதாக அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

தஞ்சை மாவட்டம், பேராவூரணியை அடுத்த மேலபூவானத்தில், சேதுமான சத்திரம் ஊராட்சி ஒன்றியத்தின் சார்பில் புதிய ஒன்றியத் தொடக்கப்பள்ளியின் தொடக்க விழா தஞ்சை முதன்மைக் கல்வி அலுவலர் க சினிவாசன் தலைமையில் நடைபெற்றது. பள்ளிக் குழுத்தலைவரும் ஒன்றிய கழகப் பொருளாளருமான எம். ஏ. தேவதாஸ் வரவேற்று பேசினார்.

இவ்விழாவில் கலந்து கொண்டு புதிய தொடக்கப் பள்ளியைத் தொடங்கி வைத்து, சிறப்புரையாற்றிய அமைச்சர் கோவேந்தன் கூறியதாவது:-

நான் எந்த இடத்துக்கு சென்றாலும், நமது பிற படுத்தப்பட்ட, ஆதி திராவிட சமுதாயங்களை சேர்ந்த, ஏழை-எளிய மக்களுக்கு வலியுறுத்திச் சொல்வதெல்லாம் தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட சமுதாயங்கள் சமுதாய அந்தஸ்து பெறுவதென்றால பொருளாதாரத்தில் உயரவேணடும் பொருளாதாரத்தில உயர வேண்டுமானால் கல்வி யறிவு பெறவேண்டும்.

### புரட்சித்தலைவர் திட்டங்கள்

ஆகவே கல்வி ஒன்றினால் தான் பிற்படுத்தப்பட்ட ஆதி திராவிட சமுதாய மக்களை உயர்த்த முடியும். இதை உணர்ந்த முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் கிராமப்புற மக்களுடைய குழந்தைகளின் கல்வி வளர்ச்சியைக் கருத்தில் கொண்டுதான் தன னிறைவுத் திட்டத்தை செயல் படுத்தினார்.

கிராமப்புற மக்களுடைய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றி அவர்களுடைய குழந்தைகள் கல்வி பயின்று மேற்படிப்புக்குச் சென்று கல்வி வளர்ச்சியைப்பெருக்கிக்கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் தான் எத்தனை கோடி என்பதைப்பற்றிக் கவலைப்படாமல் முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் தன்னிறைவு திட்டத்தை நிறைவேற்றினார். அது போலவே ஒருவேளைச் சோற்றுக்கும் வழியின்றி, கல்விபெற முடியாமல் பண்ணை வேலைக்குச் செல்லும் ஏழை குடும்பத்து மாணவர்களும் கல்விபெற வேண்டும் என்பதற்காகத் தான் ரூ 202 கோடிச் செலவில் சத்துணவுத் திட்டம் நிறைவேற்றப் படுகிறது. இதைஉணர்ந்த கிராமப்புற மக்கள் தங்கள் குழந்தைகளைத் தவறாமல் பள்ளிக்கு அனுப்பி அவர்களை கல்வி அறிவு பெறச் செய்வதல் அக்கறையுடன் செய்யப்படவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் குறிப்பிட்டார்.

மற்றும் இவ்விழாவில் ஆத்தாளூர் வீரமாகாளியம்மன் கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் பேராவூரணி ப. மலையப்பன், மக்கள் குழு உறுப்பினரும் ஒன்றிய அண்ணா தி. மு. கழக செயலாளருமான வீ. வெங்கடாசலம், உதவிக் கல்வி அலுவலர் என் சைவராஜ், பட்டுக் கோட்டை வட்டாட்சியர் பற்றும் பலர் கலந்து கொண்டனர்.

முன்னதாக மேலப் பூவானத்திற்கு வருகை தந்த அமைச்சருக்கு, வாணவேடிக்கைகள் இன்னிசை வாத்தியங்கள் முழங்க, பெண்கள் ஆரத்தி எடுக்க சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

# திட்டக்குடியில் கழக கொடியேற்று விழா

திட்டக்குடி. அக் 8- திட்டக்குடியில் 75 அடி உயரமுள்ள கம்பத்தில் அமைச்சர் கலைமணி கழகக் கொடியை ஏற்றி வைத்தார். அப்போது தந்தைபெரியார் சிலைக்கு அமைச்சர் கலைமணி மாலை அணிவித்தார்.

அப்போது, பி. கலியமூர்த்தி, இரா. அரங்கசாமி, திட்டக்குடி, டி. ஆர். சுந்தரம், பிச்சைப்பிள்ளை, செல்லப்பன், என் சேகர் ஆகியோரும் மற்றும் பலரும் கலந்து கொண்டனர்.

சிறந்த விளையாட்டு வீரர்களை உருவாக்க

# மாணவர்களுக்கு தினமும் கடுமையான உடற்பயிற்சி

## அமைச்சர் அண்டே வலியுறுத்தல்

சென்னை. அக். 8- சிறந்த விளையாட்டு வீரர்கள் உருவாக வேண்டுமானால் மாணவர்களும், மாணவிகளும் தினமும் உடற்பயிற்சி செய்வதோடு விளையாட்டுத் துறையிலும் ஈடுபட வேண்டும் என்று அமைச்சர் அண்டே யோசனை கூறினார்.

கிரிக்கெட் கிளப் ஒன்றின் ஆண்டு விழாவில் கலந்து கொண்டு நல் வாழ்வுத்துறை அமைச்சர் அண்டே பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

இந்தியர்கள் விளையாட்டுப் போட்டிகளில் பங்குபெறுவதைசீரியசாக எடுத்துக் கொள்வதில்லை வெற்றி பெறாலும் தோல்வியடைந்தாலும் விளையாட்டை ஒரு தமாஷாகவே நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள்.

வெளிநாடுகளில் குறிப்பிட்ட விளையாட்டிற்கு என்று வீரர்களை6 ஆண்டுகளுக்கு முன்பே தேர்ந்து எடுத்து விடுகிறார்கள் அரசு செலவில் ஒலிம்பிக் போட்டிகளில் பங்கு பெற வீரர்களுக்கு பயிற்சி தருகிறார்கள். அதனால் வெளிநாட்டினர் நினைத்தபடி பதக்கங்களை பெறமுடிகிறது.

இந்தியாவில் ஒரு சிறிய வெற்றியைக்கூட மிகவும் பிரபலமாக கொண்டாடுகிறார்கள்.

### வர்த்தகர்கள் லாபநோக்கு

விளையாட்டு வீரர்களை பயன்படுத்திக் கொண்டு அவர்களின் திறமையை வளரவிடாமல் தடுத்து வர்த்தகர்கள் லாபம்தேடுகிறார்கள். இந்தநிலைமை மாறவேண்டும்.

மாணவ - மாணவிகள் தினமும் உடற்பயிற்சி செய்து உடலை பாதுகாப்பதுடன் விளையாட்டுத் துறையிலும் ஈடுபட வேண்டும் சிறந்த பயிற்சியாளர்கள் இங்கு இருக்கிறார்கள் ஆனால் அதற்கேற்றபடி விளையாட்டு வீரர்கள் உருவாகவில்லை.

### உழைப்பு-பயிற்சி

கடினமான பயிற்சியின் பயனாக மேலை நாட்டவர்கள் தங்கள் நாட்டுக்கு பெருமை சேர்க்கிறார்கள்

நாமும் கடினமான உழைப்பாலும் பயிற்சியாலும் தான் விளையாட்டுத் துறையில் உலகப்புகழ் பெற முடியும்.

இவ்வாறு அமைச்சர் அண்டே கூறினார்.

விழாவுக்கு சட்ட மன்ற உறுப்பினர் சௌமிராஜன் தலைமை தாங்கினார்.

# ஏல விற்பனை

1. எஸ் பிரகாஷ்சந்த் ஜெயின, 191, வி. எம். தெரு சென்னை-14 (1-3-83 முதல் 30 7 83 முடிய) ஏலத்தேதி18.10.84. 2. பி. சுான்சந்த் ஜெயின், 191, வி. எம். தெரு, சென்னை-14 (1-3 83முதல் 1-8-83 முடிய) ஏலத் தேதி 18-10 84 3. ரிசப்சந்த்ஜெயின் 101, சண் முகராயன் தெரு. சென்னை-1 1-6-83 முதல் 29-8-83 முடிய ஏலத்தேதி 18-10-84 4. டி சர்பாலால் 101, எல்டாம்ஸ்ரோடு, சென்னை-18 (1980 ம் வருடத்திற்கு முன்பும் 24 8-82 முதல் 10-6-83 முடிய ஏலத் தேதி19-10-84 5) கௌதம் சந்த & பிரதர்ஸ் 48, எம். ஜி. ரோடு, சென்னை-41 25-8-82 முதல் 5-7-83 முடிய) ஏலத்தேதி19-10 84 6) மங்கிலால் கவுதம் சந்த் ஜெயின், 76-2, டி. எச். ரோடு.சென்னை-18(1980ம் வருடத்திற்கு முன்பும் 1-9-82 முதல் 30-7-83 முடிய) ஏலத்தேதி 19-10-84 7) எம். என். ஜெயின் 77, டி. எச், ரோடு சென்னை-81 (1980ம் வருடததிற்கு முன்பும் 25-8-82முதல் 30-7 83 முடிய) ஏலத்தேதி 19-10-84 8. மகாவீர்சந்த்ஜெயின், 1-1 கல்மண்டபம் ரோடு சென்னை-13 (25-8-82 முதல் 15-7-83 முடிய) ஏல தேதி 19.10-83 9 எச் பிரதாப் சிங் 4, இருசப்ப மேஸ்திரி தெரு சென்னை-81 (25-8 82 முதல் 30-8-83 முடிய) ஏலத்தேதி 19.10-84 10 பி. தர்மிசந்த் ஜெயின், 4 வீரபத்திர ஆச்சாரிதெரு, சென்னை-2 (1-9-82 முதல் 15.9-83 முடிய ஏலத்தேதி 20-10 84 11)பி. மோகன்லால்ஜெயின் 10, வீரபத்திரஆச்சாரிதெரு சென்னை-2 (1980 ம் வருடத்திற்கு முன்பும் 25-8-82 முதல் 30-8-83 முடிய) ஏலத்தேதி-20-10-84 (12) கன்யாலால் ஜவாரிலால் ஜெயின், 8 ஆள்வார் பேட்டைதெரு, சென்னை18 (1-4-83 முதல் 31-7-83 முடிய ஏலத்தேதி 20-10-84 13) ஆர். மானக்சந்த், 48, வில்லேஜ் ரோடு, சென்னை-34 (1980ம் வருடத்திற்கு முன்பும் 25-8-82 முதல் 30.4-83 முடிய) ஏலத்தேதி 22-10-84(14) ஆர். கிஷிபாய் 33, வில்லேஜ் ரோடு. சென்னை-34 (1980ம் வருடத்திற்கு முன்பும் 14-10-82 முதல் 30-8-83 முடிய ஏலத்தேதி 22.10-84 15. ஸி. டெஜ்ராஜ் & கோ 36, ஏ. எம். லேன் சென்னை-14 1980ம் வருடத்திற்கு முன்பும் 25-8-82 முதல் 30-8-83 முடிய ஏலத்தேதி 22-10-84 16) சோகன் கன்வார், 10A குருவப்ப செட்டி தெரு சென்னை-2 (1-2-83 முதல் 30-7-83 முடிய) ஏலத்தேதி 22-10-83 17) தீப்சந்த் சௌக்கார் 10 குருவப்ப செட்டி தெரு சென்னை-2 (1980ம் வருடத்திற்கு முன்பும் 26-8-82 முதல் 30-7-83 முடிய) ஏலத்தேதி-22-10-84 (18) எச் மித்தாலால் & கோ, 65, என். பி. கோயில் தெரு, சென்னை-79 (10-9-82 முதல் 30-7-83 முடிய) ஏலத்தேதி 22-10-84 (19) எஸ். புத்மால் ஜெயின் 109, கலவ செட்டி தெரு, சென்னை-2 (1-3-83 முதல் 9-9-83 முடிய ஏலத்தேதி 22.10-84 20 எம். நிரஞ்சன், 6. பி. எஸ். நாயுடு தெரு. சென்னை-5 (1980 ம் வருடத்திற்கு முன்பும் 25-8 82 முதல் 30-8-83 முடிய) ஏலத்தேதி 22-10-84 21 மெஸர்ஸ் பாப்னாஸ், 44, தம்புசெட்டி தெரு, சென்னை-1 (10-4-83 முதல் 25-8-83முடிய) ஏலத்தேதி 22-10-83 (22) கே. மனோஹர்மல் பாப்னா, 44, தம்புசெட்டி தெரு சென்னை-1 (1-3-83 முதல் 30-8-83 முடிய) ஏலத்தேதி 22-10-84 23) எம்- ஜி. போரா, 7. கல்மண்டபம் ரோடு, சென்னை -13 (24-8-82 முதல் 1-9-83 முடிய) ஏலதேதி22-10-84 24 ஹெம்ராஜ் செவுக்கார், 10. பஜார தெரு. சென்னை-14 1-3-83 முதல் 30-8-83 முடிய) ஏலத்தேதி 22-10-84 (25) ஜே பவர்லால்ஜெயின் 13, எம். எஸ். நாயுடு தெரு சென்னை-21 1-11-82 முதல 30-8 83 முடிய ஏலத்தேதி 22-10-84 மேற்படி கடைகளில் அடகு வைத்து மீட்கப்படாத பொருட்களை மேற்படி தேதிகளில் காலை 10-மணிக்கு மேல் வருவாய்த் துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு ஏலதாரர் எம். ஜவஹர்லால்போரா 60 சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2 அவர்களால ஏலவிற்பனை செய்யப்படும்.

# விண்வெளியில் வீராங்கனைகளின் அரிய சாதனை

## அமெரிக்க சேலஞ்சர் ஓடத்தின் தகவல் சாதனம் சீரடைந்தது

கனவரால்முனை, அக் 8- அமெரிக்க விண்வெளி ஓடமான சேலஞ்சரின் தகவல் சாதனத்தில் ஏற்பட்டிருந்த கோளாறை விண்வெளி வீராங்கனைகள் சரி செய்தனர்.

அமெரிக்க விண்வெளி ஓடமான சேலஞ்சர் தற்போது விண்வெளியில சுற்றி வருகிறது.

இந்த விண்வெளி ஓடத்தில் 2 பெண்கள் உட்பட 7 பேர்கள் பயணம் செய்து வருகிறார்கள்.

சேலஞ்சர் ஓடத்தில் திடீரென தகவல் சாதனமான ஆன்டெனாவில் கோளாறு ஏற்பட்டது.

இதனால் தகவல் அனுப்புவதிலும், பெறுவதிலும் தாமதம் ஏற்பட்டது.

இந்தக் கோளாறைச் சரி செய்யும் பணியில் விண்வெளி வீராங்கனையான சாலிரைட் ஈடு பட்டார்.

அவருக்கு உதவியாக மற்றொரு விண்வெளி வீராங்கனை கேதி சல்லிவனும் ஈடுபட்டார்.

கோளாறு அடைந்த ஆன்டெனாவுக்குப் பதில் எலெக்ட்ரானிக் பிரிவில் இருந்த மற்றொரு ஆன்டெனாவை எடுத்து இவர்கள் பொருத்தினார்கள்

இதன்பிறகு விண்வெளி ஓடத்தில் இருந்து பூமிக்கு தகவல் அனுப்பும் பணி சீரடைந்தது.

தொடர்ந்து விண்வெளி வீரர்கள் பல்வேறு சோதனைகளில் ஈடுபட்டு வருகிறார்கள்.

தினகரன் பொய்ச்செய்தி:

# குமரி மாவட்ட மாணவர் அமைப்பாளர் மறுப்பு

நாகர்கோவில், அக் 8- குமரி மாவட்ட கழக மாணவர் அமைப்பாளர் செல்வின்குமார் வெளியிட்டுள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

குமரி மாவட்டம் தக்கலையைச்சேர்ந்தமுகமது ராபி, கருக்கலைச் சேர்ந்த மோகன்குமார் ஆகியோர் கழகத்தில் இருந்து விலகி வேறு கட்சியில் சேர்ந்து விட்டதாக தினகரனில் பொய் செய்தி வெளியிடப்பட்டுள் ளது.

ஆனால் அப்பத்திரிகையில் குறிப்பிட்டபடி மேற்கண்ட பெயரில் கழக மாணவர் பிரிவில் யாரும் இல்லை.

ஆகவே வேண்டுமென்றே களங்கம் விளைவிக்கும் வகையில் செய்தி வெளியிட்ட தினகரன் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்க உள்ளோம்.

இவ்வாறு செல்வின் குமார் தெரிவித்துள்ளார்.

இலங்கை ஆட்சியாளர்களது

# பொறுப்பற்ற பேச்சால் இலங்கை - இந்திய நல்லுறவு நாசமாகியது

## அனுரா பண்டாரநாயகா குற்றச்சாட்டு

கொழும்பு, அக். 8. இலங்கை - இந்திய நல்லுறவை ஜெயவர்த்தனே அரசு நாசப் படுத்திவிட்டது என்று இலங்கை எதிர்க்கட்சி தலைவர் அனுரா பண்டார நாயகா கூறினார்.

கொழும்பில் வெளியாகும் "தி ஐலண்ட்" என்ற தினசரிக்கு அனுரா பண்டார நாயகா அளித்த பேட்டியில் கூறி இருப்பதாவது:-

நான் சார்ந்துள்ள ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி ஆட்சியில் இருந்தபோது இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே நல்லுறவு உருவாக்கப் பட்டது.

இந்த உறவு இப்போது சீர்கெட்டிருப்பதற்கு பொறுப்பில் இருப்பவர்களின் பொறுப்பற்ற பேச்சுக்களே காரணம். ஜெயவர்த்தனே அரசு இலங்கை இந்திய நல்லுறவை நாசப்படுத்திவிட்டது.

ஸ்ரீலங்காசுதந்திரக்கட்சி பதவிக்கு வரும்போது இந்தியாவில் அடைக்கலம் புகுந்து இருக்கும் யாழ்ப்பாண தீவிரவாதிகளை இலங்கைக்கு கொண்டு வருவதில்பிரச்சினை இருக்காது.

இதற்கு முன்பு சுதந்திர கட்சி இந்தியாவுடன் பேச்சுவார்த்தை நடத்தி அதன் மூலம் பெற்ற வெற்றிகளுக்கு பலசான்றுகள் இருக்கின்றன.

இந்தியாவில அடைக்கலம் புகுந்திருந்த குட்டிமணியை 1976-ல திரும்ப பெற்றோம். சர்சைக்குரியதாக இருந்த கச்சத்தீவில இலங்கையின் உரிமை நிலை நாட்டப்பட்டது.

இவ்வாறு அனுரா பண்டாரா நாயகா கூறியுளளார்,

புதுக்கோட்டை மன்னர் கல்லூரி பேரவை:

# கழக மாணவர்கள் வெற்றி

புதுக்கோட்டை: அக் 8 புதுக்கோட்டை மன்னர் கல்லூரிபேரவைத் தேர்தலில் கழக மாணவர்கள் வெற்றி பெற்றனர்.

பேரவை மாணவர் தலைவராக ராம்பாபுவும் துணை செயலாளராக ராமகிருஷ்ணனும், தமிழ் பேரவை செயலாளராக தங்கமாணிக்கமும், துணை செயலாளராக கிருஷ்ணனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

வெற்றி பெற்ற மாணவர்கள் மாணவர் அணித் துணைச் செயலாளர் கா. லியாகத் அலிகானை சந்தித்து வாழ்த்துப் பெற்றனர்.

460 பேர்களுக்கு வேலை வாய்ப்பு

# செங்கை மாவட்டத்தில் 10 நூற்பு மையங்கள் ஆரம்பிக்க திட்டம்

காஞ்சிபுரம், அக். 8- செங்கை மாவட்டத்தில் புதிதாக 10 நூற்பு மையங்கள் ஆரம்பிக்கப்பட உள்ளன இதன் மூலம் 460 பேருக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும் என்று காஞ்சீபுரம் கதர் கிராமத் தொழில் வாரிய உதவி இயக்குனர் கூறினார்.

அண்ணல் காந்தியடிகள் பிறந்தநாள்விழா மற்றும் சிறப்பு கதர் விற்பனை தொடக்க விழா காஞ்சிபுரம் கதர் அங்காடியில் நடைபெற்றது. தமிழ்நாடு கதர் கிராமத தொழில் வாரிய உறுப்பினர் எம்.எஸ் தசரதன் தலைமை தாங்கினார்.

காஞ்சிபுரம் கதர் கிராமத் தொழில் வாரிய உதவி இயக்குனர் த.சிவசினந்தம் வரவேற்றுப் பேசினார்.

செங்கை மாவட்டத்தில் சென்ற ஆண்டு ரூ 50 லட்சம் கதர் விற்பனை செய்ய குறியீடு நிர்ணயிக்கப் பட்டது. இந்த இலக்கை மீறி ரூ. 56 லட்சத்து 50 ஆயிரத்துக்கு கதர் விற்பனை நடந்துள்ளது.

இந்த ஆண்டு குறியளவு ரூ. 56 லட்சமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது கதருக்கு 35 சதவீ தமும்பட்டு ரகங்களுக்கு 20 சத வீதமும் தள்ளுபடி அளிக்கப் படுவதாக சிவானந்தம் கூறினார்.

செங்கை மாவட்டத்தில் இப்போது 8 நூற்பு மையங்கள் இயங்கி வருகின்றன. இந்த ஆண்டு மேலும் 10 நூற்பு மையங்கள் ஆரம்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

இதன் மூலம் 460 பேருக்கு வேலைவாய்ப்பு கிடைக்கும்.

மேலும் பல்வேறு கிராமத் தொழில்களுக்காக 208 பேருக்கு ரூ. 13லட்சத்து 25 ஆயிரம் கடனுதவி அளித்துவேலைவாய்ப்பை ஏற்படுத்தித்தர திட்டமிடப்பட்டுள்ளது என்றும் அவர் குறிப்பிட்டார்.

விழாவில் இரா. அன்பரசு எம். பி., மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலர் ம. ரா. மோகன், முதன்மை கல்வி அலுவலர் பி. வி. முனிரத்தினம் காஞ்சிபுரம் முருகன் பட்டு கூட்டுறவு சங்கத்தலைவர் சி. ஆர். உமாபதி ஆகியோர் கலந்து கொண்டு பேசினர். மாவட்ட செய்தி மக்கள் தொடர்பு அலுவலர் டி. கே. டி. துரைராஜன் நன்றி கூறினார்.

# அசாமில் வன்முறை: போலீஸ் துப்பாக்கிசூடு

கவுஹாத்தி, அக் 8- அசாம் மாநிலம்மன்தோர் நகரில் நடந்த வன்முறைச் சம்பவங்களை அடுத்து அப்பகுதியில் ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

அங்கு நடந்த வன்முறை சம்பவங்களில் ஒருவரும், துப்பாக்கிச்சூட்டில் ஒருவரும் இறந்தனர்.

76-வது வட்டத்தில்

# பட்டா வழங்கும் விழா

சென்னை, அக். 8— சென்னை 76-வது வட்டம் விருகம்பாக்கம் நேஷனல் தியேட்டர் எதிரில் கடன் மற்றும் பட்டா வழங்கும் விழா இன்று (8ம் தேதி) மாலை 7 மணி அளவில் நடைபெறுகிறது. வ. கோதண்டராமன், தலைமை வகிக்கிறார் பி. கே. சிவலிங்கம், மா, சம்பந்தம் முன்னிலையில் சு. பாண்டியன் வரவேற்புரையாற்றுகிறார் என்.வி.என் செல்வம் திருப்பூர் மணிமாறன் எம்.எல.ஏ ஜேப்பியார் எம்.எல்.சி ஜே.சி.டி பிரபாகரன் எம். எல். ஏ. பி. கிருஷ்ணன, பி. உமாபதி, மா. நாமலானர்தன் சி. ஏகாம்பரம் ஆகியோர் பேசுவர்.

ரூ. 1 கோடி செலவில்

# ராமேஸ்வரம் அருகே கடல் வளப்பூங்கா: மைய அரசு அனுமதி

ராமநாதபுரம், அக் 8- ரூ. 1 கோடி செலவில் நல்ல தண்ணீர் தீவில் கடல்வள பூங்கா ஒன்றை உருவாக்க மத்திய அரசு அனுமதித்துள்ளது.

சுமார் 250 ஏக்கர் பரப்பளவு கொண்ட இந்த தீவு ராமநாதபுரம் மாவட்டத்தில் கீழக்கரையிலிருந்து 12 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது.

தனியார் ஒருவருக்கு சொந்தமான இந்ததீவை வாங்க முயற்சி நடப்பதா்க அதிகார வட்டாரங்கள் கூறின.

தீவை சுற்றியுள்ள கடலில் ஏராளமான மீன்கள் இருப்பதாக தேசிய மீன்பிடிக்கும் ஆய்வுமூலம் தெரிய வந்துருப்பதாகவும் இந்த வட்டாரங்கள் தெரிவித்தன.

ராமேஸ்வரத்தில்

# போலி பாஸ்போர்ட்: 3 பேர் கைது

ராமேஸ்வரம், அக். 8— ராமேஸ்வரம் துறைமுகத்தில், போலிபாஸ்போர்ட் மூலம் இலங்கை செல்ல முயன்ற மூவர் கைது செய்யப்பட்டனர்.

இது குறித்து போலீசார் தொடர்ந்துவிசாரித்துவருகிறார்கள.

# கோயில்வேலைஎடுத்துவந்து கழக தோழர்களை தாக்கியவெறித்தனம்

கோவை, அக். 8— கோயிலில் இருந்து வேல் ஒன்றை எடுத்து வந்த ஒரு வெறியன் கழகத் தோழர்களைத் தாக்கியுள்ளார்.

இந்தக் கொடிய சம்பவம் கோவை மாவட்டம் சூலூர் ஒன்றியத்தில் நடந்துள்ளது.

சூலூர் ஒன்றியத்தில் உள்ள கணபதி பாளையத்தில் அண்ணா பவள விழாக் கூட்டம் நடந்தது.

இந்தக் கூட்டத்திற்கு தெப்பீஸ்வரன் தலைமை வகித்தார்.

கூட்டம் நடந்து கொண்டு இருந்தபோது அதே கிராமத்தைச் சேர்ந்த ஆறுகுட்டி என்பவர் மின்சார இணைப்பை துண்டித்துவிட்டார்.

கழகக்கூட்டம் நடத்தக் கூடாதுஎன்று கொக்கரித்தாராம் அதோடு அவர் நிற்காமல்கோவிலிலிருந்து வேல் ஒன்றை எடுத்து வந்துகழகத் தோழர்களை கண் மண் தெரியாமல தாக்கினார்.

இந்தத் தாக்குதலில் சூலூர், ஒன்றிய செயலாளர் பல்லடம் தொகுதி மாணவர் அமைப்பாளர் செ.ம. வேலுச்சாமிதலையிலும், மார்பிலும், காலிலும் காயம் ஏற்பட்டது.

வசுராயம்பாளையம் மணி, சோளக் காட்டுப் பாளையம் சுந்தரமூர்த்தி, தெப்பீஸ்வரன், கணபதியப்பன், தர்மராக ஆகியோருக்கும் காயம்ஏற்பட்டது அனைவரும் மருத்துவமனையில சேர்க்கப் பட்டனர்.

இந்த சம்பவம் குறித்து போலீசில புகார் கொடுக்கப்பட்டுள்ளது.

# தவறான தகவலால் ஏற்பட்ட விபரீதம்: திருமலையில் எட்டு பக்தர்கள் பட்டபாடு

திருப்பதி, அக். 8- தவறான தகவல் காரணமாக சாமி தரிசனம் செய்ய வந்த அரசு அதிகாரி உள்பட 8 பேரை முகமூடிக் கொள்ளைக்காரர்கள் என்று கருதி போலீசார் சுற்றி வளைத்துப் பிடித்தனர்.

ஆந்திரமாநிலதலைமை செயலகத்தில் வேலை பார்க்கும் ஒருவர் உட்பட 8 பேர் ஏழுமலையானை தரிசனம் செய்வதற்காக ஐதராபாத்திலிருந்து இரவல் காரில் திருப்பதிக்கு வந்தனர்.

ஓரிடத்தில் காரை நிறுத்தி பெரிய பாறாங்கற்களை கார் டிக்கியில் ஏற்றிக் கொண்டனர். அப்போது ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரி ஒருவர் அவர்களை பார்த்து விட்டார்.

அவர்கள் திருப்பதியில் 4 பேரை கொலை செய்து விட்டு கொள்ளை அடித்துச்சென்ற கொள்ளைக்காரர்களாக இருக்கலாம் என்றுசந்தேகப்படுவதாகபோலீசாருக்கு அவர் தெரிவித்தார். கார், நம்பரையும் கூறினார்.

உடனே போலீசார் உஷார் ஆனார்கள். தங்களுக்குகிடைத்ததகவலை வைத்து, காரைத்தேடினார்கள் நள்ளிரவில் திருமலையில் உள்ள ஒரு ஓட்டலின் முன்பு கார் நிறுத்தப் பட்டிருந்ததைக் கண்டார்கள்.

கூடுதல் போலீஸ் சூப்பிரண்டு தலைமையில் ஆயுதம் ஏந்திய போலீசார் காரில் வந்த 8பேரையும் வளைத்துப் பிடித்தனர். அவர்களைப்பிடித்து விசாரணை நடத்தியதில் உண்மையிலேயே அவர்கள் சாமிதரிசனம் செய்ய வந்தவர்கள் என்பதும் அவர்களில் ஒருவர் மாநில தலைமைச் செயலகத்தில் அதிகாரியாக வேலை பார்ப்பவர் என்பதும் தெரிய வந்தது.

பாறாங்கற்களை ஏன் காரில் கொண்டுவந்தனர் என்ற கேள்விக்கு மலைப்பாதையில் காரை நிறுத்தும்போது பின்பக்கமாக உருண்டோடிச் செல்லாமல் தடுக்க பாறாங்கற்களை சக்கரங்களுக்கு கீழே வைப்பதற்காக எடுத்து வந்த சொல்லப்பட்டது.

இதற்கிடையில் இச்செய்தி பத்திரிகையில் வெளியாகிவிடவே, 8 பேரும் வெளியே வரவே பயந்தனர். போலீசார் அவர்களுக்கு பாதுகாப்பு அளித்து ஊருக்கு அனுப்பி வைத்தனர்.

குமரி மாவட்டத்தில்

## அண்ணா பவள விழா கூட்டங்கள்

நாகர்கோவில், அக்.8— குமரி மாவட்டத்தில் அண்ணா பவள விழாக் கூட்டங்கள் நடைபெற்றன.

மீனாட்சிபுரம் தோப்பு வணிகர் நடுத்தெருவில் நடைபெற்ற அண்ணா பவளவிழா பொதுக் கூட்டத்திற்கு எஸ். குமரேசன் தலைமை வகித்தார். இளை செயலாளர் எம். முருகன் முன்னிலையில் சிதம்பரம் வரவேற்றார். மாவட்ட கழக மன்ற செயலாளர் தமிழ் மகன் உசேன், சென்னை காசிநாதன் மதுரைசெல்வி வளர்மதி, புரட்சிவாணன் நகர செயலாளர் ரவீந்திரன், நாஞ்சில் ஞானதாஸ், பி. ஏ. ரஹீம், சந்திரசேகரன், டென்னிசன், தர்மராஜ். சேவியர் தனம் மற்றும் பலர் பேசினார்கள். கே. தாணு நன்றி கூறினார்.

பால்குளம் பகுதியில் அண்ணா பவளவிழா கொடியேற்று விழா. டாக்டர் ஜே. சி. பாபு தலைமையில், ரத்தின பாண்டியன் முன்னிலையில் மாவட்ட மன்ற கழக செயலாளர் அ. தமிழ் மகன் உசேன் கொடி ஏற்றி வைத்து சிறப்புரையாற்றினார். காசிநாதன் தர்மராஜ், சென்னை புரட்சிவாணன் ஆகியோர் பேசினார்கள்.

## உபி-ராயல்பூடான் லாட்டரி முடிவுகள்

### ஆந்திர லட்சுமி

ஐதராபாத், அக். 8— ஆந்திர லட்சுமி லாட்டரியின் 8-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
சி பி 151301

இதே எண்கள் உடைய மற்ற வரிசைசீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு.

2-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
சி ஏ 95576 சி பி- 81471
சி சி- 21540

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசுஉண்டு

3-வது பரிசு
தலா ரூ. 500
82126 46925 55954
12223 17727 70288
26970 03592 62444
13528

4-வது பரிசு
தலா ரூ. 50
0421 6373 1917 3976
5644 5571 3788 8827
2381 5747

5-வது பரிசு
தலா ரூ 20
5112 9034 1675 7158
4451 6460 5760 5416
7975 3572

6-வது பரிசு
தலா ரூ. 10
007 112 242 317 451
593 612 723 859 981

7-வது பரிசு
தலா ரூ. 5
026 155 277 394 490
518 639 795 827 953

### அருணாசல பிரதேசம்

அருணாசல பிரதேச லாட்டரியின் 58வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(ரூ 1 லட்சம்)
ஜி இ 471569

2-வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
ஜி ஏ 346209
ஜி பி- 352294
ஜி சி. 248663

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசுஉண்டு

3-வது பரிசு
தலா ரூ. 500
16318 45716 45989
53590 53636 58959
63227 62401 90533
97318

4-வது பரிசு
தலா ரூ. 50
0040 2687 7180 7344
7504 7625 8123 8344
8366 9752

5-வது பரிசு
தலா ரூ. 20
0905 0196 1102 1257
2890 6159 6615 6617
7646 9765

6-வது பரிசு
(தலா ரூ 10)
097 173 223 308 440
596 675 768 848 911

7-வது பரிசு
(தலா ரூ 5)
057 072 073 098
109 123 151 183
221 226 253 272
331 335 356 361
420 427 441 496
502 505 555 567
621 627 675 695
704 734 759 796
855 870 879 889
915 928 932 941

### உ. பி. ராபின்

உ. பி. ராபின் லாட்டரியின் 134-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
ஆர் யூ 390101

இதே எண்கள் உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு.

2-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
ஆர் எஸ் 228506
ஆர் டி-305425

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ. 500
33692 81429 91634
85239 56207 71736
91530 86158 04369
15879

4-வது பரிசு
தலா ரூ. 50
6981 4323 9376 5577
7696 5511 4599 3356
7229 6266

5-வது பரிசு
தலா ரூ. 20
7525 8459 0812 9362
8069 3727 6650 2634
9939 0402

6-வது பரிசு
தலா ரூ. 10
032 134 246 366 430
549 688 749 828 980

7-வது பரிசு
தலா ரூ. 5
062 072 073 038 191
146 192 115 294 208
252 244 378 335 313
310 424 447 443 490
595 537 511 543 670
614 605 684 784 716
733 787 815 822 895
811 990 901 903 908

### ராயல் பூடான்

ராயல் பூடான் லாட்டரியின் 270-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
தலா ரூ. 1 லட்சம்
கே 445582 எல் 271692
எம் 303220 என் 606349

ஆறுதல் பரிசு
(தலா ரூ 1000)
கே 271692 303220
606349
எல் 445582 303220
606349
எம் 445582 271692
606349
என் 445582 271692
303220

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
கே 506910
எல் 162428
எம் 670058
என் 572110

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ 500
11066 46931 02756
90523 49229 40786
01624 29353 91846
74363

4-வது பரிசு
தலா ரூ 50
2870 7936 8940 9502
8089 5541 3990 9087
6746 2975

5-வது பரிசு
தலா ரூ. 20
1672 0655 1025 8063
6014 7282 2980 2047
9932 1469 1439 1884
1282 1093 7949 3481
5553 9805 1665 8664

6 வது பரிசு
தலா ரூ 10
041 132 228 334
415 541 638 775
838 955





Edited And Published by K. RAVINDRAN on Behalf of Thangamani Publications And Printed by All India Anna D. M. K. Peraignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029